# மருத்துவ ஜோதிடம்

ஜோதிடத்தில் பல்வேறு பிரிவுகள் உள்ளன. மருத்துவ ஜோதிடம் அவைகளில் ஒரு பிரிவாகும். சித்த மருத்துவத்தில் நாடி பார்த்து, நடை பார்த்து,முகம் பார்த்து,கை பார்த்து,உடல் பார்த்து நோய் கண்டறிகிறார்கள். ஹோமியோபதி மருத்துவத்தில் உச்சி முதல் உள்ளங்கால் வரை தோன்றும் அறிகுறிகளையும்,மனதில் தோன்றும் எண்ணங்களையும் ஆராய்ந்து நோய் கண்டறிகிறார்கள்.அலோபதி மருத்துவத்தில் பல்வேறு ஆய்வுகூட சோதனைகள் செய்து நோய் கண்டறிகிறார்கள்.இது போல் ஜோதிடர்கள் தனி நபர் ஜாதகங்களை ஆய்வு செய்து நோய் கண்டறிவது சாத்தியமே.

சித்த மருத்துவர்களும்,ஆயுர்வேத மருத்துவர்களும், காலமறிந்து சிகிச்சை அளித்து வந்திருக்கிறார்கள்.இவர்களில் பெரும்பாலோர் ஜோதிடம் அறிந்தவர்களாக இருந்திருக்கிறார்கள். ஜோதிடம் மூலம் நோய் கண்டறிவது எப்படி என்பதை விளக்குவது மருத்துவ ஜோதிடமாகும்.

ராசிகளின் நோய்

மேசம் – பித்தம்

ரிசபம் – நீர்க்கோர்வை

மிதுனம் – வாயு

கடகம் – நீர்க்கோர்வை

சிம்மம் – பித்தம்

கன்னி – வாயு

துலாம் – நீர்க்கோர்வை

விருச்சிகம் – பித்தம்

தனுசு – வாதம்

மகரம் – வாயு

கும்பம் – வாதம்

மீனம் – வாதம்

ராசிகளின் தத்துவங்கள்

மேசம் – நெருப்பு

ரிசபம் – நிலம்

மிதுனம் – காற்று

கடகம் – நீர்

சிம்மம் – நெருப்பு

கன்னி – நிலம்

துலாம் – காற்று

விருச்சிகம் – நீர்

தனுசு – நெருப்பு

மகரம் – நிலம்

கும்பம் – காற்று

மீனம் – நீர்

ராசிகளின் உடல் உறுப்புகள்

மேசம் – தலை

ரிசபம் – கழுத்து,முகம்,வாய்,பல்,நாக்கு,உதடு,கண்

மிதுனம் – தோள்பட்டை,கைகள்,விரல்,நகம்,காது

கடகம் – மார்பு,

சிம்மம் – தொப்புள்,மேல்வயிறு,முதுகு

கன்னி – அடிவயிறு,குடல்

துலாம் – இடை,இடுப்பு,மர்ம உறுப்பு

விருச்சிகம் – குதம்,பிருஷ்டம்

தனுசு – தொடை

மகரம் – கால் மூட்டு

கும்பம் – கணிக்கால்

மீனம் – பாதம்

கிரக தத்துவம்

சூரியன் - நெருப்பு

சந்திரன் - நீர்

செவ்வாய் - நெருப்பு

புதன் - காற்று

குரு - ஆகாயம்

சுக்கிரன் - நீர்

சனி - காற்று

ராகு – காற்றும் நெருப்பும்

கேது – நெருப்பு

கிரக பிணி

சூரியன் –சுரம்,பித்தம்

சந்திரன் - நீர்க்கோர்வை

செவ்வாய் – மூட்டுவலி,பித்தம்

புதன் – தேமல்,வாதம்

குரு- மூளைக்கோளாறு,வாயுக்கோளாறு

சுக்கிரன் – சிறுநீரக கோளாறு

சனி – நரம்பு தளர்ச்சி, வாயுக்கோளாறு

ராகு - வாயுக்கோளாறு

கேது – நகச்சுற்று,பித்தம்

கிரக முக பாகம்

சூரியன் – வலது கண்

சந்திரன் – இடது கண்

செவ்வாய் - புருவம்,பற்கள்

புதன் நெற்றி,நாக்கு,கழுத்து

குரு – மூக்கு,நாசி

சுக்கிரன் - கன்னம்

சனி - தாடை

ராகு – வாய்,உதடு,காது

கேது –முடி

கிரக உடல் பாகம்

சூரியன் – வலது கண்,எலும்பு

சந்திரன் – இடது கண்,மார்பகம்,சிறுநீரகம்,வயிறு

செவ்வாய் - இருதயம்

புதன் – கைகள்,கழுத்து,தோள்பட்டை,தொண்டை,

குரு –மூளை,தொடை,பாதம்,மூக்கு, நாசி

சுக்கிரன் – முகம்,கருப்பை,சுக்கிலம்,சுரோணிதம்,கன்னம்

சனி-பிருஷ்டம்,மூட்டு,முழங்கால்,ஜீரண உறுப்பு,தாடை

ராகு –குடல்,மலக்குடல்,காது,தலை

கேது - நகம்,முடி,ஆசனவாய்,மர்ம உறுப்பு

கிரக உடல் உள்பாகம்

சூரியன் - எலும்பு

சந்திரன் -ரத்தம்

செவ்வாய்-எலும்பு மச்சை,சிவப்பணுக்கள்

புதன்- தோல்

குரு-சதை,கொழுப்பு

சுக்கிரன் - விந்து

சனி-ஜீரண உறுப்பு

ராகு - குடல்

கேது- நரம்பு

நோய் குறிகாட்டும் பாவங்கள்

6 ம் பாவம் – தவறான உணவு பழக்க வழக்கங்களால் வரும் நோய்கள்

8 ம் பாவம் – பரம்பரை நோய்கள்,பூர்வ ஜென்ம பாவத்தால் வரும் நோய்கள்.

பாதக ஸ்தானங்கள் – செய்வினை கோளாறுகளால் வரும் நோய்கள்.

சர லக்னங்களுக்கு 11ம் பாவமும், ஸ்திர லக்னங்களுக்கு 9ம் பாவமும், உபய லக்னங்களுக்கு 7ம் பாவமும் பாதக ஸ்தானங்களாகும்.

நோய் நிவர்த்தி பாவங்கள்

6 க்கு 12 ம் பாவம் நிவர்த்தி பாவமாகும்.

8 க்கு 2 ம் பாவம் நிவர்த்தி பாவமாகும்.

11 க்கு 5 ம் பாவம் நிவர்த்தி பாவமாகும்.

9 க்கு 3 ம் பாவம் நிவர்த்தி பாவமாகும்.

7 க்கு 1 ம் பாவம் நிவர்த்தி பாவமாகும்.

நோய் எதிர்ப்பு சக்தியை குறிக்கும் பாவங்கள்

3 மற்றும் 5 ம் பாவங்கள்

நோய் குறிகாட்டும் கிரகங்கள்

செவ்வாய் - தவறான உணவு பழக்க வழக்கங்களால் வரும் நோய்கள்

சனி - பரம்பரை நோய்கள்,பூர்வ ஜென்ம பாவத்தால் வரும் நோய்கள்.

நோய் எதிர்ப்பு சக்தியை குறிக்கும் கிரகங்கள்

சூரியன் – உடல் தெம்பு, புத்துணர்ச்சி,உயிராற்றல்

சந்திரன் – உடல் சத்துக்கள்.

சுக்கிரன் – வீர்ய சக்தி

மருத்துவ ஜோதிட விதிகள் (பாரம்பரிய முறை)

1.கடுமையான நோய்களை கண்டறிய சந்திரனின் நிலையை பார்க்கவும்.

2.நாள்பட்ட வியாதிகளை கண்டறிய சூரியனின் நிலையை பார்க்கவும்.

3.இளமையில் வரும் நோய்களை கண்டறிய சந்திரனின் நிலையை பார்க்கவும்.

4.முதுமையில் வரும் நோய்களை கண்டறிய சூரியனின் நிலையை பார்க்கவும்.

5.ஜாதகத்தில் சூரியன்,சந்திரன் நிற்கும் ராசிகள் குறிக்கும் உடல் பாகங்களில் எந்தவிதமான அறுவை சிகிச்சையும் செய்யக்கூடாது.

6. ஜாதகத்தில் செவ்வாய்,சனி நிற்கும் ராசிகள் குறிக்கும் உடல் பாகங்களில் ஏதாவது ஒரு நோய் இருக்கும்.

7.ஜாதகத்தில் சூரியன்,சந்திரன் ஆட்சி,உச்சம் பெற்று நின்றால் நோய்கள் எளிதில் குணமாகும்.

8.மேசம்,சிம்மம்,ரிசபம்,கடகம்,துலாம் ஆகிய லக்கினங்களில் பிறந்தவர்களுக்கு நோய் எளிதில் குணமாகும்.

9.கன்னி லக்கினம்,கன்னி ராசியில் பிறந்த பெண்கள் நல்ல செவிலியராக செயல்படுவர்.

10.லக்கினத்திற்கு 6 ல் சனி,செவ்வாய் உள்ளவர்கள் நோயாளிகளை பார்க்கவோ,தொடவோ கூடாது.இவர்கள் தொட்டால் நோய் எளிதில் குணமாகாது.

11. லக்கினத்தில் சூரியன்,சந்திரன்,சுக்கிரன்,உள்ள்வர்கள் நோயாளியை பார்ப்பதும்,தொடுவதும் நல்லது.நோய் வரைவில் குணமாகும்.

12. லக்கினாதிபதி ஆட்சி ,உச்சம் பெற்று வலுத்து நிற்க,6-8க்குடையவர்கள் நீச்சம்,பகை, அஸ்தமனம் பெற்று நின்றால் நோய் எதிர்ப்பு சக்தி உடலில் அதிகமாக இருக்கும்.

13. லக்கினாதிபதி பகை , நீச்சம் ,அஸ்தமனம் பெற்று நிற்க,6-8க்குடையவர்கள் ஆட்சி ,உச்சம் பெற்று நின்றால் உடலில் நோய் எதிர்ப்பு சக்தி குறைவாக இருக்கும்.

14. லக்கினத்திற்கு 6 -8 ல் அதிக எண்ணிக்கையில் கிரகங்கள் நின்றால் ஒரே நேரத்தில் பல வியாதிகல் ஒன்றாக வந்து தக்கும்.

15.நோயாளியின் லக்கினத்திற்கு 6-8 ம் வீடுகளை ஜென்ம லக்கினமாகவோ,ஜென்ம ராசியாகவொ அல்லது பெயர் ராசியாகவோகொண்டவர்கள்.நோயாளியை பார்க்கக்கூடாது.இவர்கள் பார்த்தால் நோய் எளிதில் குணமடையாது.

16. லக்கினத்திற்கு 6-8 ல் நின்ற கிரகம் அல்லது 6-8 க்குடைய கிரகங்கள் சம்பந்தமான நோய்கள் வரும்.

17.ராகு ,கேதுக்கள் நின்ற பாவங்கள் குறிக்கும் உடல் உறுப்புகளில் ஏதாவது நோய் இருக்கும்.

நோய் வரும் காலம்

1.லக்கினத்திற்கு 6-8 க்குடைவர்களின் சாரம் மற்றும் 6-8 ல் நின்ற கிரங்களின் சாரம் பெற்ற கிரகம் தசா-புக்தி நடத்தும்போது உடலில் நோய்கள் தோன்றும்.

2.குருவுக்கு 6-8ல் நிற்கும் கிரகம் தசா-புக்தி நடத்தும்போது உடலில் நோய்கள் தோன்றும்.

3. லக்கினத்திற்கு 6-8 க்குடைவர்கள் நிற்கும் ராசி மற்றும் அந்த ராசிக்கு திரிகோண ராசிகளில் கோச்சார குரு அல்லது கோச்சார சனி வரும் காலம் உடலில் நோய் தோன்றும்.

4. லக்கினத்திற்கு 6-8 க்குடைவர்கள் நின்ற நவாம்ச ராசி மற்றும் அந்த ராசிக்கு திரிகோண ராசிகளில் கோச்சார குரு அல்லது கோச்சார சனி வரும் காலம் உடலில் நோய் தோன்றும்.

5.லக்கினத்திற்கு அல்லது லக்கினாதிபதி நின்ற ராசிக்கு திரிகோண ராசிகளில் ராகு வரும்

காலம் உடலில் நோய் தோன்றும்.

சிகிச்சைக்கு உகந்த நட்சத்திரங்கள்

அஸ்வினி,சதயம் –அனைத்து வியாதிகளும் நீங்க.

பூசம்- பரம்பரை நோய்கள்,பூர்வ ஜென்ம பாவத்தால் வரும் நோய்கள் நீங்க.

மகம்-பித்ரு சாபத்தால் வரும் நோய்கள் நீங்க.

